

ஸ்ரீ:

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.



# திருப்பாணாழ்வார் வைபவம்.

* கங்கையிற் புனிதமாய காவிரிநதி பாயப்பெறுதலால் ஒப்புயர்வற்ற தூய்மைபெற்ற சோழவளநாட்டிலே ராஜநகரங்களிந்தனுள் ஒன்றாய், தருமவர்மா வென்னும் செம்பியனுக்குக் குமாரியாய் நீளாதேவி அவதரித்த இடமான உறையூரிலே, துர்மதி வருஷத்தில் கார்த்திகைமாதத்து ரோஹிணி நக்ஷத்ரத்திலே திருமாலினது ஸ்ரீவத்ஸத்தின் அம்சமாய் ஒருவர் ஓர் அந்தணனது கழனியிலே நெற்பயிர்க்கதிரில் அவதரித்தார்.

பிறவாதுபிறந்த அத்தெய்வக் குழந்தையை அவ்வூரிற் பஞ்சமசாதியிற் பாணர்குலத்துப் பிறந்தாரொருவன் பார்த்து நல்வினைப்பயனென்று மகிழ்ந்து எடுத்துக்கொண்டுபோய், மலடுதீர்ந்து, மருவியகாதல் மனையாளுந்தானுமாக, பசுவின்பால் முதலிய பரிசுத்த ஆஹாரங்களையே கொடுத்துப் போஷித்துவந்தான்.

அங்ஙனம் வளர்ந்த இவர் திருமாலருளால் தோன்றியவராதலால், இயற்கையிலே உலகப் பற்றற்று எம்பெருமானது திருவடித்தாமரைகட்குத் தம் மனத்தை மதுகரமாக்கியதுமன்றி, தாம் புகுந்த குலத்துக்கு ஏற்ற யாழ்ப்பாடலிலும் தேர்ச்சிபெற்று அதனால் பாணர் என்றே பேர் கூறப்பட்டு, நாரதபகவான்போல ஞானவைராக்கியங்களோடு ஸங்கீத ஸாமர்த்தியமும் முதிர்ந்து நின்றார்.

இவ்வாறிருக்கையில் விஷ்வக்ஸேநர் ரஹஸ்யமாக எழுந்தருளி இவர்க்குத் திருவிலச்சினை ஸாதித்துச்சென்றார்.

அதனால் மஹாபாகவதோத்தமராகிய இவர் ரங்கநாதனுக்குப் பாடல்திருத்தொண்டு செய்ய உத்தேசித்துப் புறப்பட்டு, தாம் தாழ்ந்த குலத்தில் வளர்ந்

Released by Maaran's Dog , Toronto, Canada

தவராதலால் உபயகாவேரிமத்தியிலுள்ள ஸ்ரீரங்கதிவ்யக்ஷேத்ரத்தில் அடியிடுதற்குத் துணியாமல் தென்திருக்காவேரியின் தென்கரையில் திருமுகத்துறைக்கெதிரிலே யாழுங்கையுமாக நின்றுகொண்டு நம்பெருமாளைத் திசைநோக்கித் தொழுது அப்பெருமான் விஷயமாக அநேக திவ்யகீதங்களை, கண்டமும் கருவியுமொக்க, கேட்பவர் செவியும் மனமும் குளிர, எம்பெருமான் திருவுள்ளமுகக்க, கிந்நர கந்தர்வாதியர் வியப்புறப் பாடினார்.

முன்பு திருக்குறுங்குடியில் நாடோறும் பகவத்விஷயமான யாழிசைபாடிக் கைசிகமென்னும் பண்ணின் பயனால் தன்னைச் சரணமடைந்த ஒரு ப்ராஹ்மராக்ஷஸ்ஸையும் தீவினைதீர்த்து நற்கதி அடைவித்துத் தானும் பிறவிப்பெருங்கடல் கடந்த 'நம்பாடுவான்' என்னும் ஜாதிசண்டாளன்போலவே இவ்விழிகுலத்தவரும் பக்தியாற் பரவசப்பட்டு நெஞ்சம் நெக்குருகக் கண்கள் ஆநந்த வருவி சொரிய உடல் மயிர்க்கூச்செறிய நாடோறும் வைகறையிலேவந்து இசைபாடாநிற்கையில், ஒருநாள், திருவரங்கச்செல்வனுக்குத் தீர்த்தகைங்கரியஞ்செய்கிற லோகஸாரங்கரென்னும் அந்தணர் தலைவர் தீர்த்தங்கொண்டுவருவதற்குப் பொற்குடத்தை யெடுத்துக்கொண்டு பொன்னித்துறையை அடைகையில் அருகிலுள்ள இந்தப் பாணரைப் பார்த்து அருவருத்து 'எட்டச்செல்' என்று பலமுறை பணிக்கவும், இவர் இவ்வுலகத் தொடர்பை மறந்திருந்ததனால் அம்மொழியைச் செவியுறாமல் வாளா நின்றிட்டார்.

அச்செய்தியைக் கேள்வியுற்று மூர்க்ககுணமெனக்கருதி அக்கொண்டது விடாமையைக் குலைக்கத்துணிந்த சாதியபிமானம்மிக்க பல ப்ராஹ்மணர்கள் ஓடிவந்து 'போ போ' என்று பலமுறை கூறவும் அது செவியிற்படாமையாற் பாணகுலதிலகர் சிறிதும் பெயராது நிச்சலமாய் இராகம் பாடிக்கொண்டிருக்க, அதுகண்டு அவர்களிற் சிலர் வியந்து 'இவன் ஞானயோகி அல்லன்; கானயோகிபோலும்' என்று நினைத்துப்போக முரட்டுக்குணமுடைய சிலர் 'எப்படியும் இப்பொழுது இவனை இடம்விட்டுத் துரத்தாது விடுவதில்லை' என்று விவாதஞ்செய்து இவர்மேல் பல கற்களை எடுத்து இடைவிடாது ஒருங்கே எறிய அவ்வன்சிலைகள் இவருடைய மெல்லுடல்மேல் நன்குபட்டிடவும், இவர், பக்திவயப்பட்டதனால் சிறிதும் ஸ்பர்சவுணர்ச்சியின்றி, சோனைமாரியாக ஏழு மேகங்களையுங்கொண்டு இந்திரன் ஏககாலத்திலே பொழிவித்த சிலாவர்ஷத்துக்குச் சற்றும் பின்னிடாத கோவர்த்தனமலைபோலச் சிறிதும் சலியாதிருந்தார். அதுகண்டு அபார்கோன்போல அனைவரும் அஞ்சி அகன்றனர்.

அப்பொழுது இவரது உடம்பிலும் உள்ளத்திலும் க்ஷதமும் வருத்தங் காணப்படவில்லையாயினும் பக்தர்களது அந்தரங்கத்தில் அமர்ந்திருக்கின்ற அரங்கநாதனது திருவுள்ளம் மிகக்கலங்க, திருநெற்றியும் இரத்தப் பெருக்குற்றது.

அதனைநோக்கி அர்ச்சகர் மிகவும் பயப்பட்டுக் கோயிலதிகாரிகளுக்கு அறிவிக்க, அவர்களும் இவ்வற்புதச் செய்தியை அரசனுக்குப் போகவிட, மந்திரிக

னோடு பலவிதமாக ஆராய்ந்தும் அரசன் காரணங்காணாது கவன்று ஸ்வாமி திருவடியிலே பாரத்தை வைத்திட்டான்.

அதற்குமுன்னே ஒருநாள், பிராட்டி பெருமானை நோக்கி 'வெகுகாலமாக நம்மை அநவரத பாவனை பண்ணிவருகிற நம் பாணன் புறம்பே நிற்கப் பார்த்திருக்கலாமோ?' என்று விண்ணப்பஞ் செய்ததற்கு, எம்பெருமான், விரைவிலே அவரை அருகில் அழைத்துக் கொள்வதாக வாக்களித்திருந்தனன்.

அநந்தரம் அவ்வாறே பிராட்டியின் இஷ்டத்தை நிறைவேற்றவும் பாணரைப் பெருமைப்படுத்தவும், "பகவத் ப்ராப்திக்கு ஜாதி முக்கியமன்று; பக்தியே அமையும்" என்ற ஸகலசாஸ்த்ர ஸாரப்பொருளை நடத்திக்காட்டவும் திருவுள்ளங்கொண்டு திருவரங்கேசன் லோகஸாரங்கமாமுனிவரது கனவில் தோன்றி 'நமக்கு நல்லன்பரான பாண்பெருமானை இழிவாக நினையாமல் நீர் சென்று தோள்களில் எழுந்தருளப்பண்ணி வாரும்' என்று நியமிக்க, அவர் ப்ராஹ்ம முஹூர்த்தத்திற் கண்விழித்தவளவிலே ஸ்வப்நத்தில் ஸ்வாமி நியமித்ததை நினைந்து அதிசயித்து, அப்படியே செய்து தாம் பேறுபெறக்கருதி அச்செய்தியை அத்திருப்பதியிலுள்ளார் யாவர்க்குந் தெரிவித்து அவர்களும் உடன்வரச் சென்று திருமுகத்துறையிலே தீர்த்தமாடித் தௌதவஸ்திர முடுத்துப் பன்னிரண்டு திருமண்காப்புகளணிந்து காலைக்கடன் கழித்துக் கரையேறிப் பாணர் வழக்கமாக நிற்கின்ற விடத்துச்சென்று அவர் திருவடிகளிலே ஸாஷ்டாங்கமாகத் தண்டனிட்டு, 'தேவரீரைத் தம்மிடத்துக்கு எழுந்தருளப் பண்ணுவித்துக்கொண்டு வரவேண்டுமென்று நம்பெருமாள் அடியேனுக்குக் கட்டளையிட்டருளினார்' என்று சொல்ல, பாணர்தலைவர் 'நீசனான அடியேன் திருவரங்கப் பெருநகரை மிதித்திடுவேனோ?' என்று தம் சாதியிழிவைச் சொல்லி மறுத்திட்டனர்.

அப்பால் முனிவர் 'தேவரீர் மிதித்திடவேண்டா; பெருமாள் பெரியதிருவடியின் திருத்தோளில் எழுந்தருளுதல்போலத் தேவரீர் அடியேனது தோளில் ஏறியருளும்' என்று பிரார்த்திக்க, அதுகேட்டவளவிலே பாணர் அளவிறந்த அச்சங்கொண்டு அதனால் உடல் நடுநடுங்கிச் சொற்குழறி 'மஹாபரிசுத்த மூர்த்தியான தேவரீர் அடியேன் திறத்து இங்ஙனங் கூறவொண்ணாது; பாகவதர் பாதத்திலே தலையை வணக்குதற்கு உரிய யானோ இக்கொடுந்தொழில் புரிவேன்? இது செய்து பாகவதாபசாரப் படுதலினும் எரிவாய் நரகத்து அழுந்துவது நலமன்றோ?' என்று நைச்சிய வார்த்தைகள் கூறினார்.

அதன்பின் முனிவரர் பகவந்நியமநத்தை விண்ணப்பஞ்செய்து 'அது அதிக்ரமிப்பதற்கு உரியதன்று' என்று பகர்ந்து நிர்ப்பந்திக்க, பின்னை வீணைப் பாடகர் கடவுள் கட்டளைக்கு யாதும் மாறு கூறமாட்டாமற் கூப்பியகையராய் அநந்தசயனுக்கே தம்மை அர்ப்பணஞ்செய்து பரதந்த்ரராய் நின்றிட்டார்.

பின்னர் முனிவரர் பாணநாதரைத் தோளிலேற்றிக்கொண்டு, முத்தனுப் போமவனை ஆதிவாஹிகர் எழுந்தருளுவித்துக்கொண்டு திருமாமணி மண்டபத்

துக்குச் செல்லுமாறுபோலச் சென்று ரங்கநாதனது திருமுன்பே இறக்கிவிட்டனர்.

உடனே முனிவாஹநர் [பாணர்], *இருளகற்று மெறிகதிரோன் மண்டலத்தூடேற்றி வைத்தேணிவாங்கி அருள் கொடுத்திட்டடியவரை ஆட்கொள்வானை அணியரங்கனது திவ்யமங்கள விக்ரஹத்தைப் பாதாதிகேசம் நேத்ராநந்தமாகச் சேவித்து அதில் ஆழ்ந்து அதன் அழகை அநுபவித்து அவ்வநுபவாதிசயத்தைப் பின்புள்ளார்க்கும் விசதமாக்குதற்பொருட்டு "அமலனாதிபிரான்" என்ற திவ்யப்ரபந்தத்தைத் திருவாய்மலர்ந்தருளி அதன் இறுதியில்,

"கொண்டல்வண்ணனைக் கோவலனாய் வெண்ணெய்
உண்டவாய னென்னுள்ளங் கவர்ந்தானை
அண்டர்கோ னணியரங்க னென்னமுதினைக்
கண்டகண்கள் மற்றொன்றினைக் காணாவே"

என்று தமது நிலையை வெளியிட்டு உலகத்தாரை வாழ்வித்து மிகவும் உகப்போடு நிற்கையில், பெரியபெருமாள் அத்திருமேனியோடு அவரை அங்கீகரித்தருளத் திருப்பாணாழ்வார் அனைவருங்காண அப்பிரானது திருவடிகளிலே அந்தர்ப்பவித்துக் காய்ந்த இரும்பு உண்ட நீராயினர்.

கோபாலன் குழலிசையாற் கோக்களை மகிழ்வித்ததுபோல அக்கோவிந்தனை யாழிசையால் மகிழ்வித்த இவ்வாழ்வார் இவ்வுலகில் வாழ்ந்திருந்தது ஐம்பது வருஷகாலமென்பர்.

லோகஸாரங்கர் முதலிய பலர் இவ்வாழ்வாரை ஆச்ரயித்து நற்கதி பெற்றனர்.

"காண்பனவு முரைப்பனவு மற்றொன்றின்றிக்
கண்ணனையே கண்டுரைத்த கடியகாதற்
பாண்பெருமா ளருள்செய்த பாடல்பத்தும்
பழமறையின் பொருளென்று பரவுமின்கள்."

திருப்பாணாழ்வார் வைபவம் முற்றிற்று.

---

"கார்த்திகையில் ரோகிணிநாள் காண்மினின்று காசினியீர்!
வாய்த்த புகழ்பாணர் வந்துதிப்பால்—ஆத்தியர்கள்
அன்புடனே தானமல னாதிபிரான் கற்றதற்பின்
நன்குடனே கொண்டாடும் நாள்."

---



ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## திருப்பாணாழ்வார் அருளிச்செய்த அமலனாதிபிரான்

# தனியன் உரை.

(பெரியநம்பிகள் அருளிச்செய்த தனியன்.)

𑌶𑍍𑌲𑍋 ॥ 𑌆𑌪𑌾𑌦𑌚𑍂𑌡𑌮𑌨𑍁𑌭𑍂𑌯 𑌹𑌰𑌿𑌂 𑌶𑌯𑌾𑌨𑌂
𑌮𑌧𑍍𑌯𑍇 𑌕𑌵𑍇𑌰𑌦𑍁𑌹𑌿𑌤𑍁𑌰𑍍𑌮𑍁𑌦𑌿𑌤𑌾𑌨𑍍𑌤𑌰𑌾𑌤𑍍𑌮𑌾 ।
𑌅𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑍃𑌤𑌾𑌂 𑌨𑌯𑌨𑌯𑍋𑌰𑍍𑌵𑌿𑌷𑌯𑌾𑌨𑍍𑌤𑌰𑌾𑌣𑌾𑌂
𑌯𑍋 𑌨𑌿𑌶𑍍𑌚𑌿𑌕𑌾𑌯 𑌮𑌨𑌵𑍈 𑌮𑍁𑌨𑌿𑌵𑌾𑌹𑌨𑌂 𑌤𑌂 ॥

ஆபாதசூட மநுபூய ஹரிம் சயாநம்
மத்யே கவேரதுஹிதுர் முதிதாந்தராத்மா :
அத்ரஷ்ட்ருதாம் நயநயோர் விஷயாந்தராணும்
யோ நிச்சிகாய மநவை முநிவாஹநம் தம். ॥

### பதவுரை.

| | | | |
|---|---|---|---|
| 𑌯𑌃 | யாவரொரு திருப்பாணாழ்வார் | 𑌨𑌯𑌨𑌯𑍋𑌃 𑌵𑌿𑌷𑌯𑌾𑌨𑍍𑌤𑌰𑌾𑌣𑌾𑌂 𑌅𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑍃𑌤𑌾𑌂 | (தமது) திருக்கண்கள் (அப்பெருமானன்றி) மற்றொன்றையும் காணமாட்டாமையை |
| 𑌕𑌵𑍇𑌰𑌦𑍁𑌹𑌿𑌤𑍁𑌃 | திருக்காவேரியின் | | |
| 𑌮𑌧𑍍𑌯𑍇 | நடுவில் | | |
| 𑌶𑌯𑌾𑌨𑌂 | திருக்கண்வளர்ந்தருளுகிற | 𑌨𑌿𑌶𑍍𑌚𑌿𑌕𑌾𑌯 | அறுதியிட்டருளினாரோ, |
| 𑌹𑌰𑌿𑌂 | அழகியமணவாளப் பெருமாளை | 𑌤𑌂 | அப்படிப்பட்ட |
| 𑌆𑌪𑌾𑌦𑌚𑍂𑌡𑌂 | திருவடி தொடங்கித் திருமுடியளவாக | 𑌮𑍁𑌨𑌿𑌵𑌾𑌹𑌨𑌂 | லோகஸாரங்க மஹாமுநியை வாஹநமாகக்கொண்ட திருப்பாணாழ்வாரை |
| 𑌅𑌨𑍁𑌭𑍂𑌯 | (கண்குளிர) அநுபவித்து | | |
| 𑌮𑍁𑌦𑌿𑌤𑌾𑌨𑍍𑌤𑌰𑌾𑌤𑍍𑌮𑌾 | மகிழ்ந்த சிந்தையராய் | 𑌮𑌨𑌵𑍈 | சிந்திக்கக்கடவேன். |

* திருவரங்கப் பெருநகருள் தெண்ணீர்ப்பொன்னி திரைக்கையா லடிவருடப் பள்ளிகொள்ளுங் கருமணியாகிய ரங்கநாதனைக் கண்ணாரக்கண்டுகளித்து, "அமலனாதிபிரா னடியார்க்கென்னை யாட்படுத்த விமலன்" என்று தொடங்கி ஒவ்வொரு பாட்டிலும் ஒவ்வொரு அவயவமாகப் பாதாதிகேசாந்தம் அநுபவித்து, இறுதியில் "என்னமுதினைக் கண்டகண்கள் மற்றொன்றினைக் காணாவே" என்று 'இவ்வரிய பெரிய விஷயத்தைக் காணப்பெற்ற எனது கண்களானவை

இனி வேறொரு பொருளையும் காணமாட்டா' என்று தமது உறுதியை வெளியிட்டருளின திருப்பாணாழ்வாரைச் சிந்திக்கக்கடவேன் என்கிறது.

"முநிவாஹநம்" என்றதன் விவரம் இவ்வாழ்வாரது வைபவத்திலே விரித்துரைக்கப்பட்டது; அங்கே காண்க.

(திருமலைநம்பி அருளிச்செய்த தனியன்.)

(அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.)

காட்டவே கண்டபாத கமலநல் லாடையுந்தி
தேட்டரு முதரபந்தந் திருமார்வு கண்டஞ்செவ்வாய்
வாட்டமில் கண்கள்மேனி முனியேறித் தனிபுகுந்து
பாட்டினால் கண்டுவாழும் பாணர்தாள் பரவினோமே.

| | | | |
|---|---|---|---|
| முனி ஏறி | லோகஸாரங்க முனியின் (தோளின்மேல்) ஏறி | கண்டம் | திருக்கழுத்தும் |
| தனி புகுந்து | தனியே உள்ளே புகுந்து | செம் வாய் | சிவந்த வாயும் |
| காட்டவே கண்ட | (அம்முனிவர்) காண்பித்தபடியே கண்டு ஸேவிக்கப்பட்ட | வாட்டம் இல் | சோர்வு இல்லாத |
| | | கண்கள் | திருக்கண்களும் |
| | | | (ஆகிய இவற்றோடு கூடிய) |
| பாத கமலம் | திருவடித்தாமரைகளும் | மேனி | திருமேனியை |
| நல் ஆடை | விலக்ஷணமான திருப்பீதாம்பரமும் | பாட்டினால் கண்டு வாழும் | பாசுரங்களின் அநுஸந்தானத்தோடுகூட ஸேவித்து ஆனந்தித்த |
| உந்தி | திருநாபியும் | | |
| தேட்டரும் | கிடைத்தற்கு அரிதான | பாணர் | திருப்பாணாழ்வாருடைய |
| உதர பந்தம் | பொன் அரைநாணும் | தாள் | திருவடிகளை |
| திரு மார்வு | பிராட்டி வாழ்கிற மார்பும் | பரவினோம் | துதிக்கப் பெற்றோம். |

கீழ்த்தனியனிற் பொருளை விவரிக்கிறது. இத்தனியன் லோகஸாரங்கமாமுனிகள் தமது தோளிலே ஏற்றிக்கொண்டு கோயிலுக்குள்ளே சென்று அழகிய மணவாளனுடைய ஸகலாவயவ ஸௌந்தர்யத்தையும் நன்கு காட்டியருள, "அமலனாதிபிரான்" என்று தொடங்கித் திருவடிமுதல் ஒவ்வொரு அவயவங்களையும் ஸேவித்து அநுபவிக்கப்பெற்ற திருப்பாணாழ்வாரைத் துதித்தோமென்கிறது.

பாதகமலம்—வடசொல் தொடர். தேட்டரும்—தேடுதற்கு முடியாத—துர்லபமான—மிகச்சிறந்த என்றபடி. உதரபந்தம்—வடசொல்தொடர்; திருவயிற்றில் கட்டுகிற பொன்னரைநாண். கண்டம்—கழுத்து. ... *

தனியன் உரை முற்றுப்பெற்றது.

---

என்றிப்படி தமது ரஹஸ்யத்ரயஸாரத்தில் இருபத்தைந்தாவதான ப்ராயஸ்யவஸ்தாதிகாரத்தில் எழுதிவைத்தார். தாயானவள் மகனால் நமஸ்கரிக்கத் தக்கவளாயினும் ரஜஸ்வலையாயிருக்குங் காலத்தில் அவள் எப்படி அதனுக்குத் தகாதவளாயிருப்பளோ, அப்படியே நிஹீநவர்ணத்தில் அவதரித்த ஆழ்வார் முதலிய பாகவதோத்தமர்கள் நமஸ்காரம் முதலிய ஸகல உபசர்யைகளும் செய்தற்குரியராயினும் அவர்கள் அந்த சரீரத்துடன் இருக்குமளவும் அத்தகைய உபசர்யைகளுக்கு அவர்கள் உரியரல்லர்; அவர்கள் முக்தி பெற்ற பின்புதான் நமக்கு விசேஷமாக கௌரவிக்கத்தக்கவராவர் என்பது தேசிகனது கொள்கையாயிருந்தது. இதனால், நம்மாழ்வார் திருவடிகளில் அந்தணர்தலைவரான ஸ்ரீமதுரகவிகள் ஸகலவித பரிசர்யைகளும் செய்துகொண்டிருந்தவாற்றிலும் லோகஸாரங்கமுனிகள் திருப்பாணாழ்வாரைத் தோளில் தூக்கிக்கொண்டு ஸந்நிதிக்கு எழுந்தருளினவாற்றிலும் தேசிகனுக்கு மிக்க ஸம்சய விபர்யயவுணர்ச்சி நெஞ்சிற் குடிகொண்டிருந்தது. இக்காலத்தில் நாலெழுத்துக் கற்றவாறே ஸர்வஜ்ஞபாவனைகொண்டு காஷாயாடை யுடுத்து பாகவத வேஷதாரிகளாய் அஹங்காரமொன்று தவிர வேறொன்று மறியாதாராய், ப்ராஹ்மண தூஷணமே யாத்திரையாக இருக்கின்ற தொண்டரிற் கெட்ட இண்டர் விஷயமாகக் கூறவேண்டுங் கூற்றுக்களைத் தேசிகன் மெய்யடியார்களிற் சிறந்த ஆழ்வார்கள் விஷயத்திலும் கூறி மஹாபசாரத்திற்கு ஆளாயிருந்து வந்ததுபற்றி எம்பெருமான் திருவுள்ளம் மிகவும் புண்பட்டுக்கலங்கி, “மஹாஜ்ஞாதாவாகிய இவர்க்கு ஸகலசாஸ்திர ரஹஸ்யப்பொருள் உண்மையாகத் தெரியவில்லையே; இவரை ஒரு ஸதாசார்யர் திருவடிகளில் ஆச்ரயிக்கச்செய்து இம்மெய்ப்பொருளை இவர் நெஞ்சிற் பதியச்செய்ய வேணும்” என்பதாக எம்பெருமானுக்குப் பேராசையுண்டாகி அதற்குரிய விரகுகளைச் சிந்தித்துக்கொண்டிருக்கையில்,—

அக்காலத்திலே கோயிலில் உபயவேதாந்த க்ரந்தப்ரவசனஞ் செய்துகொண்டு வாழ்ந்தருளாநின்ற பெரியவாச்சான்பிள்ளை அதிக திருநக்ஷத்ரபூர்த்தியாலே திருமேனிதளர்ந்து திருமாளிகையிலேயே எழுந்தருளியிருக்க; அவருடைய சிஷ்யர்கள் ஸகலசாஸ்த்ர ப்ரவீணர்களாய் ஆங்காங்கு ஸத்ஸம்ப்ரதாயஸித்த விசேஷார்த்தங்களை உபந்யஸித்துவருகையில், தேசிகன், அவ்வர்த்தங்கள் தம் திருவுள்ளத்துக்கு இசையாமையாலே ஒவ்வொரு அர்த்தத்திலும் குசோத்யங்கள் செய்துகொண்டிருக்க, அவர்களும் அவர்க்குத் தினவடங்க விடையளித்தும் அவர் தெளியக்காணாமையாலே அவர்கள் பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளிலே சென்று இச்செய்தியை விண்ணப்பஞ்செய்ய, பிள்ளையும் மிகவும் திருவுள்ளம் நொந்து, “நம் தர்சனத்திலே இத்தூப்புற்பிள்ளை ஒருவர் மாத்திரம் இங்ஙனே மதிமயங்கி அபார்த்தங்கள் விளம்புவதே! இவரைச் சீர்திருத்த எம்பெருமான்தான் அருள்புரியவேணும்” என்றிங்ஙனே பலவற்றைத் திருவுள்ளத்திலே நினைத்தருள, ஏற்கனவே தேசிகனை ஸதாசார்யர் திருவடிக

விலே ஆச்ரயிப்பித்து வாழ்விக்கவேணுமென்று மநோரதித்துக்கொண்டிருந்த
எம்பெருமான் அன்றிரவு தேசிகனுடைய கனவிலே தோன்றி "பிள்ளாய்!
உமக்கு இந்த விச்வாமித்ர ஸ்ருஷ்டி ஆகாது; ஆளவந்தார், எம்பெருமானார்,
ஆழ்வான், பட்டர், நஞ்சீயர், நம்பிள்ளை முதலானோருடைய ப்ரபாவங்களைக் கேட்
டறியீரோ? அவர்களுக்குத் தெரியாததொரு ப்ரமாணகதி உமக்குத் தெரி
யுமோ? அவர்களெல்லோரும் கேவலசாஸ்த்ரங்களிற்காட்டிலும் ஆழ்வாரு
டைய ப்ரத்யக்ஷங்களுக்குச் சேர்ந்திருக்கிற சாஸ்த்ரங்கள் ப்ரபலமாகையாலே
தத்வத்திலும் அநுஷ்டாநத்திலும் நாதமுனி முகமாக ஆழ்வாரருளிச்செய்த
கட்டளையை உபதேச பரம்பரையாகவே பெற்று அதுவே அனைவர்க்கும் உஜ்ஜீ
வநமாக உபதேசித்தருள்கின்ற பெரியவாச்சான்பிள்ளையின் ஸ்ரீஸூக்திகளில்
அவஜ்ஞையை ஒழித்துப் புதுவழிகளை விட்டுவிடும்" என்று நியமித்தருள,
தேசிகன் திருக்கண்விழித்து 'தந்யோஸ்மி, க்ருதார்த்தோஸ்மி, அநுக்ருஹீ
தோஸ்மி' என்று பலவாறாக ஆநந்தித்துக்கொண்டு, கீழ் தாம்நின்ற நிலைமைக்கு
நொந்துகொண்டு கண்ணுங்கண்ணீருமாகப் பெரியவாச்சான்பிள்ளை திருவடிக
ளிலே வந்து விழுந்து படுகாடுகிடக்கையில், அவரும் அருகிலிருந்த முதலிகளைக்
கொண்டு தூப்புல்பிள்ளையை எடுக்கச்சொல்லித் திருக்கைகளாலே அணைத்து,
'உமக்கிப்படி அநுதாபம் பிறந்தபோதே ஸமஸ்தாபசாரங்களும் கழிந்தன;
இனி அஞ்சாதேகொள்ளும்!' என்று ஆச்வஸிப்பிக்க, தேசிகனும் பெரியவாச்
சான்பிள்ளை திருவடிகளிலே திருவிலச்சினையும் விசேஷார்த்தங்களும் பெற்று
'அடியேனுக்குத் திருவாராதநம் ஸாதித்தருளவேணும்' என்று ப்ரார்த்திக்க,
பெரியவாச்சான்பிள்ளையும் தமக்கு அந்தரங்கரான ஸ்ரீவைஷ்ணவரை அழைத்
துத் தம்முடைய கோயிலாழ்வார் திருக்காப்பை நீக்கச்சொல்லித் தூப்புற்
பிள்ளையை நோக்கி 'நீர் போய்க் கண்ணை மூடிக்கொண்டு ஒரு எம்பெருமானை
எழுந்தருளப் பண்ணிக்கொள்ளும்' என்று நியமிக்க, தூப்புல்பிள்ளையும் எழுந்
திருந்து ஸந்நிதியிலே போய்த் தண்டன்ஸமர்ப்பித்துத் திருக்கண்களை மூடிக்
கொண்டு ஒருவரை எழுந்தருளப்பண்ணிக்கொண்டு பார்க்குமளவில் அந்தத்
திருக்கோலம் திருப்பாணாழ்வாராயிருந்தார்; தூப்புல்பிள்ளை அவரைக்கொண்டு
பெரியவாச்சான்பிள்ளை திருமுன்பேகாட்ட, பெரியவாச்சான்பிள்ளையும் 'உம்
முடைய நெஞ்சைப் பரிஷ்காரமாகச் சீர்திருத்துகைக்காக எம்பெருமான்
இங்ஙனே அருள்புரிந்தான்; ஆகையாலே இவரை நித்யமாக ஆராதித்துக்
கொண்டு இவருடைய திவ்யப்ரபந்தமான அமலனாதிபிரானுக்கு ஒரு வியாக்
யானமிடும்; ஜாதிநிரூபணமடியாகவந்த அபசாரமெல்லாம் தீயினில் தூசாகும்'
என்று அருளிச்செய்ய, தேசிகன் அந்த ஆசார்ய நியமனத்தைச் சிரமேற்
கொண்டு "முநிவாஹநபோகம்" என்ற பெயரால் அமலனாதிபிரான் வியாக்
யானமருளிச்செய்தார்—என்று.

(இவ்வைதிஹ்யத்தில், பெரியவாச்சான்பிள்ளை ஸ்தாநத்தில் பிள்ளைலோகா
சார்யரைக் கூறுவாருமுண்டு; தேசிகனருளிச்செய்த "லோகார்ய பஞ்சாசத்"
என்ற ஸ்தோத்ரமும் ஸேவிக்கத்தக்கது.)

இவ்வைதிஹ்யத்தை வடவாசார்ய வகுப்பினர் பெரும்பான்மையர் ஏற்றுக் கொள்ளுகின்றிலர்; அதிகாரஸங்க்ரஹ மென்னும் தேசிகப்ரபந்தத்தில் முதற் பாட்டில் "நம் பாண நாதன்" என்றவிடத்திற்கு உரை எழுதியவர்—"[நம் பாணநாதன்] திருப்பாணாழ்வாராகிற நம்முடைய நாதன்; 'முனிவாஹநன்' என்று திருநாமமாம்படியாகவும் ஸ்ரீவேதாந்தாசார்யரென்று திருநாமஞ்சாத்தியருளியும் தங்களிருவரிடத்திலும் பெரியபெருமாள் வ்யாமோஹஞ் செய்தருளின இச்சம்பந்தத்தையிட்டு விசேஷித்து நம்முடைய நாதனென்று அநுஸந்திக்கிறார்" என்று வரைந்தமையால் இதுகாரணமாகவேதான் முனிவாஹநபோக மருளிச்செய்ததும்-என்கிறார்கள். ஆனால் ஒன்றுண்டு யாமுரைப்பது:—முனிவாஹந போகமுடிவில் தேசிகன் அருளிச்செய்திருக்கும் "காண்பனவு முரைப்பனவும்" என்றபாட்டில் "நாண் பெரியோமல்லோம் நாம் நன்றுந்தீதும் நமக்குரைப்பாருளரென்று நாடுவோமே" என்றருளிச் செய்திருக்குமாற்றை நன்கு ஆராய்ந்தால், நெஞ்சையும் மத்யஸ்தநிலையிற் செலுத்திப் பார்த்தால் உண்மைவிஷயம் உள்ளத்தேபுகும். நிற்க.

இத்திவ்யப்ரபந்தத்தில் முதல் மூன்றுபாட்டுக்கு முதலான அக்ஷரம் அ-உ-ம ஆகையால் மூலமாகிய ஓற்றையெழுத்தின் முதல் நடு இறுதியானவை என்னும் ரஹஸ்யம் உய்த்துணரத்தக்கது. ... ... ... ...

அமலனாதிபிரான் அடியார்க் கென்னை யாட்படுத்த
விமலன் * விண்ணவர்கோன் விரையார்பொழில் வேங்கடவன் *
நிமலன்நின்மலன் நீதிவானவன் நீண்மதிளரங்கத்தம்மான் * திருக்
கமலபாதம்வந்து என் கண்ணினுள்ளன வொக்கின்றதே. (க)

| | | | |
|---|---|---|---|
| அமலன் | பரிசுத்தனாய் | நிமலன் | ஆச்ரயிப்பார்க்கு அரியனாயிருக்கையாகிற குற்றமற்று, ஆச்ரித பாரதந்திரியத்தை வெளியிட்டு நிற்குமவனாய் |
| ஆதி | ஜகத்காரணபூதனாய் | | |
| பிரான் | உபகாரகனாய் | | |
| என்னை | (இழிகுலத்தவனான) என்னை | | |
| அடியார்க்கு | (தனது) அடியவர்களான பாகவதர்களுக்கு | நின்மலன் | அடியாருடைய குற்றத்தைக் காண்கையாகிற தோஷமில்லாத வத்ஸலனாய், |
| ஆள்படுத்த | ஆட்படுத்துகையாலே வந்த | | |
| விமலன் | சிறந்தபுகழையுடையனாய் | நீதி வானவன் | சேஷசேஷி முறை வழுவாதபடி நியாயமே செல்லும் நிலமான பரமபதத்துக்கு நிர்வாஹகனாய் |
| விண்ணவர் கோன் | நித்யஸூரிகட்குத் தலைவனாயிருந்துவைத்து (ஆச்ரிதர்கட்காக) | | |
| | | நீள் மதிள் | உயர்ந்த மதிள்களையுடைய |
| விரை ஆர் பொழில் | பரிமளம் மிக்க சோலைகளையுடைய | அரங்கத்து | கோயிலிலே (கண்வளர்ந்தருளுகிற) |
| வேங்கடவன் | திருவேங்கடமலையில் வந்து தங்குமவனாய் | அம்மான் | ஸ்வாமியான அழகிய மணவாளனுடைய |

# க. அமலனாதிபிரான்.

| | | | |
|---|---|---|---|
| திருக் கமல பாதம் | திருவடித்தாமரைகளானவை | என் கண்ணின் உள்ளன ஒக்கின்றதே | என் கண்ணுக்குள்ளே புகுந்தன போலிரா நின்றனவே. |
| வந்து | தானேவந்து | | |

கருத்து:—பெரியபெருமாள் திருவடிகளிலழகு மேல்விழுந்து நம்மைப் பரவசமாக்கியவாறு கூறுகின்றார், இதில். அமலன், விமலன், நிமலன், நின்மலன் என்ற நான்கு சப்தங்களுக்கும் பொருள் ஒன்றே; தாத்பர்யபேதம் மாத்திரம் கொள்ளவேண்டும். பரமநிஹீநரான தாம் ஸந்நிதிக்குள்ளே புகுவதனால் பெருமாளுக்குப் பெருத்த அவத்யம் உண்டாயிடும் என்று அஞ்சியிருந்தவர். அந்த சங்கை தவிர்ந்தமை தோற்ற அமலன் என்கிறார். ஹேயப்ரதிபடன்—ஹேயவஸ்துஸம்பந்தத்தால் தனக்கொரு கெடுதி விளையப்பெறாதவன் என்கை.

நமது சிறுமையை நோக்காதே நம்மைப் பாகவதர்க்கு ஆட்படுத்தி ஒரு சீரிய பொருளாக ஆக்குகையாலே எம்பெருமானது திருமேனியிற்பிறந்த ஒரு விலக்ஷண தேஜஸ்ஸை அநுபவிப்பார் விமலன் என்கிறார். தன்னுடைய ஸ்வம்மான ஒரு சரக்கு மிக்க சிறப்புப்பெற்றால் ஸ்வாமியின் மேனி ஒளிபெற்றுத் தோன்றுமன்றே.

பிரமன் சிவன் முதலானோரும் அஞ்சி அணுகவேண்டும்படியான ஐஸ்வரியம் மிகுந்திருக்கச்செய்தேயும் † குறும்பறுத்த நம்பிக்குக் கூசாதே நித்யஸம்ச்லேஷம் பண்ணலாம்படி தனது ஈச்வரச்சனையாகிற ஆச்ரயணவிரோதி தோஷத்தை மறைத்து "ஸர்வஸஹிஷ்ணுரர்ச்சகபராதீநாகிலாத்மஸ்திதி:—அர்ச்சகபராதீநாகிலாத்மஸ்திதி:" என்றபடி அடியார்க்கு எளியனாயிருக்குந் தன்மையை வெளியிட்டு நிற்குமவன் என்பார். நிமலன் என்கிறார். நின்மலன் என்றது—அடியார்களுடைய குற்றங்களைக் காண்கையாகிற குற்றமில்லாதவன் என்றபடி. அடியார் குற்றங்களைக் கண்டாலும் அவற்றை போக்யமாகக் கொள்ளுமவனிறே எம்பெருமான்.

முதலடியில், ஆதி என்றவிடத்துக்கு வியாக்கியான மருளிச்செய்யாநின்ற தேசிகன், "இக்காரணத்வமும் மோக்ஷ ப்ரதத்வமும் சத்ர சாமரங்கள்போலே ஸர்வலோக சரண்யனுக்கு விசேஷசிஹ்நங்கள்" என்று அருளிச்செய்திருப்பதைக் கண்டுவைத்தும், ஜகத்காரணத்வத்திலும் மோக்ஷ ப்ரதத்வத்திலும் பிராட்டிக்கும் ஸாக்ஷாத் அந்வயமுண்டென்று சிலர் சொல்லுவர்கள்!.

லோகஸாரங்கமாமுனிவரின் திருத்தோளின்மேல் ஏறின திருப்பாணாழ்வார் ஜேஷ்த்வத்தைக் கொண்டாடினாரேயொழிய ஜேஷத்வத்தைப் பாராட்டவில்லையே; அப்படியிருக்க "அடியார்க்கென்னை ஆட்படுத்தவிமலன்" என்றது எங்ஙனே? என்று சங்கைபிறக்கக்கூடும்; ஜேஷத்வத்துக்குத் தகுதியாகத்

† இக்கதை ஸ்ரீவேங்கடாசல மாஹாத்ம்யத்தில் விசதம்.

திருவடியிலே யிருக்கவேண்டிய திருத்துழாய் திருமுடிமேலேறியிருந்தால் அவ்வளவாலே அதன் போக்யத்வம் குறைபடாதன்றே; அதுபோலக் கொள்க.

பிள்ளைதிருநறையூரரையரைச் சிலர் "பெரியபெருமாளை அநுபவிக்க இழிந்த இவ்வாழ்வார் திருவேங்கடமுடையான் பக்கல் போவானேன்?" என்று கேட்க; "ஆற்றிலே அழுந்துகிறவன் ஒருகாலைத் தரையிலே ஊன்றினால் பிழைக்கலாமோ என்று கால்தாழ்க்குமாபோலே, இவரும் பெரியபெருமாளழகிலே அழுந்துகிறவராகையாலே திருமலையிலே கால்தாழ்ந்தார்" என்றாராம். "ஒருவனைக் கவிபாடும்போது அவனுடைய வரலாறுசொல்லிக் கவிபாடவேணும்; பரமபதத்தில் நின்றும் ஸ்ரீமதுரையிலேதங்கித் திருவாய்ப்பாடிக்கு வந்தாப்போலே ஸ்ரீவைகுண்டத்தில்நின்றும் திருமலையிலே தங்கியாய்த்துக் கோயிலுக்கு வந்தது; அவ்வரலாற்றைப் பாடுகிறபடி" என்றும் ஒருகால் அருளிச்செய்தாராம்

கமலபாதம்—வட சொற்றொடர். (க)

உவந்த வுள்ளத்தனாய் உலகமளந்தண்டமுற *
நிவந்த நீண்முடியன் அன்றுநேர்ந்த நிசாசரரை *
கவர்ந்த வெங்கணைக்காகுத்தன் கடியார்பொழி லரங்கத்தம்மான் * அரைச்
சிவந்த வாடையின்மேல் சென்றதா மெனசிந்தனையே. (உ)

| | | | |
|---|---|---|---|
| உவந்த உள்ளத்தன் ஆய் | மகிழ்ச்சியோடு கூடிய மனத்தையுடையனாய்க் கொண்டு | வெம் கணை | கொடிய அம்புகளையுடைய |
| உலகம் அளந்து | மூவுலகங்களையும் அளந்து | காகுத்தன் | இராமபிரானாய், |
| அண்டம் உற | அண்டகடாஹத்தளவுஞ் சென்று முட்டும்படி | கடி ஆர் | மணம் மிக்க |
| நிவந்த | உயர்த்தியை அடைந்த | பொழில் | சோலைகளையுடைய |
| நீள் முடியன் | பெரிய திருமுடியையுடையனாய் | அரங்கத்து | ஸ்ரீரங்கத்தில் எழுந்தருளியிருப்பவனான |
| அன்று | முற்காலத்தில் | அம்மான் | எம்பிரானுடைய |
| நேர்ந்த | எதிர்த்து வந்த | அரை | திருவரையில் (சாத்திய) |
| நிசாசரரை | ராக்ஷஸர்களை | சிவந்த ஆடையின்மேல் | பீதாம்பரத்தின்மேல் |
| கவர்ந்த | உயிர்வாங்கின | என சிந்தனை | என்னுடைய நினைவானது |
| | | சென்றது ஆம் | பதிந்ததாம். |

கருத்து:—கீழ்ப்பாட்டில், "திருக்கமலபாதம் வந்து" என்றதும், இப்பாட்டில் "ஆடையின்மேற் சென்றதாமென சிந்தனை" என்றதும் உற்றுநோக்கத்தக்கவை. முதலில் எம்பெருமான் தானாக ஆழ்வாரை அடிமைகொள்ள மேல்விழுந்தபடியும், பிறகு ஆழ்வார் ருசிகண்டு தாம் மேல்விழுகிறபடியும் இவற்றால் தோற்றும். ஈன்ற தாயானது தன்கன்றுக்கு முதலில் முலைச்சுவை தெரியாமை

யாலே தானே தன்முலையை அதன் வாயிலே கொடுக்கும்; பின்பு சுவடறிந்தால் நாகு காற்கடைக்கொண்டாலும் கன்று தானே மேல்விழும்; அப்படியே, திருவடிகள் தானேவந்து போக்யமானவாறு கூறினர் முதற்பாட்டில்; இதில், தம்முடைய நெஞ்சு சுவடறிந்து மேல்விழுமாறு கூறுகின்றனரென்க.

உலகமளந்த வரலாறு:—மஹாபலியென்னும் அஸுரராஜன் தன் வல்லமையால் இந்திரன் முதலிய யாவரையும்வென்று மூன்று உலகங்களையும் தன் வசப்படுத்தி அரசாட்சி செய்துகொண்டு செருக்குற்றிருந்தபொழுது, அரசிழந்த தேவர்கள் திருமாலைச் சரணமடைந்துவேண்ட, அப்பெருமான் குள்ள வடிவான வாமநாவதாரங்கொண்டு கச்யபமாமுனிவனுக்கு அதிதிதேவியினிடந் தோன்றிய பிராமண ப்ரஹ்மசாரியாகி, வேள்வியியற்றி யாவர்க்கும் வேண்டிய அனைத்தையுங் கொடுத்துவந்த அந்த மாவலியிடஞ்சென்று, தவஞ்செய்தற்குத் தன் காலடியால் மூவடிமண்வேண்டி, அது கொடுத்தற்கு இசைந்து அவன் தாரைவார்த்துத் தத்தஞ்செய்தநீரைக் கையிலேற்று உடனே திரிவிக்கிரமனாகி ஆகாயத்தை அளாவிவளர்ந்து ஓரடியால் பூலோகத்தையும் மற்றோரடியால் மேலுலகத்தையுமளந்து, தானமாகப்பெற்ற மற்றோரடிநிலத்திற்கு இடமில்லாதொழியவே அதற்காக அவன் வேண்டுகோளின்படி அவனது முடியில் அடியை வைத்து அவனைப் பாதாளத்தில் அழுத்தி அடக்கினன் என்பதாம். பூலோகத்தை அளந்ததில் அதன்கீழுள்ள பாதாளலோகமும் அடங்கிற்று; எனவே எல்லாவுலகங்களையுமளந்ததாம். இச்சரித்திரத்தினால், கொடியவரை அடக்குவதற்கும், இயல்பில் அடிமையாகின்ற அனைத்துயிரையும் அடிமைகொள்வதற்கும் வேண்டிய தந்த்ரம் வல்லவன் என்பது போதரும்.

உலகளக்கும்போது அடியாரோடு அஹங்காரிகளோடு வாசியற எல்லார் தலையிலும் திருவடியைவைத்து அவர்களை தந்யராக்கப்போகிறோமென்று எம்பெருமான் திருவுள்ளத்திற்கொண்டஉகப்பை வெளியிடுகிறார். உவந்த உள்ளத்தனாய் என்று.

நிசாசரர், காகுத்தன், சிந்தனை—வடசொற்கள். நிசாசரர்-இரவில் திரியுமவர்களிறே ராக்ஷஸர்கள். காகுத்தன்—ககுத்ஸ்தனென்று ப்ரஸித்தி பெற்ற அரசனது குலத்திற் பிறந்தவன்; (ஸ்ரீராமன்;) எருதுவடிவங்கொண்ட இந்திரனது முசுப்பின் மேலேறி யுத்தஞ்செய்யச்சென்றதனால் இவ்வரசனுக்குக் ககுத்ஸ்தனென்று பெயராயிற்று. [ககுத்-முசுப்பு; ஸ்தன்-இருப்பவன்.]

"நிமிர்ந்தநீண்முடியன்" என்பதும் பாடம். (௨)

மந்திபாய் வடவேங்கட மாமலை * வானவர்கள்
சந்திசெய்ய நின்றா னரங்கத்தரவி னணையான் *
அந்திபோல் நிறத்தாடையு மதன்மேலயனைப் படைத்ததோரெழில் *
உந்திமேலதன்றோ அடியேனுள்ளத் தின்னுயிரே. (௩)

Released by Maaran's Dog , Toronto, Canada

| | |
|---|---|
| மந்தி | குரங்குகளானவை |
| பாய் | (ஒரு கிளையில் நின்றும் மற்றொரு கிளையில்) பாயப்பெற்ற |
| வட வேங்கடம் மா மலை | வடதிசையிலுள்ள திருவேங்கடமென்னும் திருமலையிலே |
| வானவர்கள் | நித்யஸூரிகள் |
| சந்தி செய்ய நின்றான் | பூக்களைக்கொண்டு ஆராதிக்கும்படி நிற்பவனாய், |
| அரங்கத்து | கோயிலிலே |
| அரவு இன் அணையான் | திருவனந்தாழ்வானாகிற போக்யமான படுக்கையையுடையவனான அழகிய மணவாளனுடைய |
| அந்தி போல் நிறத்து ஆடையும் | செவ்வானம்போன்ற நிறத்தையுடைய திருப்பீதாம்பரமும் |
| அதன்மேல் | அப்பீதாம்பரத்தின்மேலே |
| அயனை படைத்தது ஓர் எழில் உந்திமேலது அன்றோ | பிரமனைப்படைத்த ஒப்பற்ற அழகையுடைய திருநாபிக்கமலமும் ஆகிய இவற்றின் மேற்படிந்ததன்றோ |
| அடியேன் உள்ளத்து இன் உயிர் | என்னுடைய மனஸ்ஸிலே விளங்குகிற இனிதான ஆத்மஸ்வரூபம். |

கருத்து:—“அடியேனுள்ளத்தின்னுயிர் எழிலுந்திமேலதன்றோ” என இயையும். இங்கு வாநரங்களைக் கூறியது சபலரான ஸம்ஸாரிகளைக் கூறியவாறும். *நின்றவா நில்லா நெஞ்சினையுடையராய் ஒன்றைவிட்டு ஒன்றைப் பற்றுகிற க்ஷுத்ரபல காமிகளான ஸம்ஸாரிகளுக்கு வாநரங்களே ஒத்த நிதர்சநமாம்.

பரமபதத்திலே கைங்கர்யஸாம்ராஜ்யத்துக்கு முடிசூடியிருக்கிற முக்தரும் நித்யரும் தேசோசிதமான தேஹங்களைப் பரிக்ரஹித்துக்கொண்டு திருமலையிலே வந்து கைங்கர்யங்கள்பண்ண, அவற்றைப் பெறுகைக்காக அங்கே நித்ய ஸந்நிஹிதனாயிருக்கும் ஸ்ரீரங்கநாதனுடைய திருப்பீதாம்பரத்திலும் திருநாபீகமலத்திலும் என் சிந்தை குடிகொண்டதென்கை.

‘வடவேங்கடமாமலை நின்றான்’ என்றவுடனே, வருந்தி ஏற வேண்டும்படியான திருமலையும் நம்போன்றவர்க்குப் பரமபதம்போல் அரிதேயன்றோ என்று சிலர் குறைபட, உடனே, ‘அரங்கத்தரவினணையான்’ என்று எளிமையை அருளிச்செய்தபடி.

“அந்திபோல்நிறம்” என்பதற்கு-அடியாருடைய அஜ்ஞாநவிருளைக் கழிக்கவல்ல நன்ஞானமாகிற ஸூர்யோதயத்துக்குக் கிழக்கு ஸந்த்யைபோலவும், அவர்களுடைய தாபத்ரயத்தை ஆற்றுதற்கு மேற்கு ஸந்த்யைபோலவும் இராநின்ற, என்று கருத்துரைப்பர் தூப்புற்பிள்ளை.

முதற்பாட்டில் ஆதி என்ற அடைமொழியால் எம்பெருமானுக்குச்சொன்ன ஜகத்காரணத்வத்தை இப்பாட்டில் மூன்றாமடி நிலைநாட்டுகின்றது போலும்;

“ ஆபோ தேவா [illegible]
[illegible]

[illegible]
[illegible]

த்ரயோதேவா ஸ்துல்யா: த்ரிதயமிதமத்வைதமதிகம்
த்ரிகாதஸ்மாத் தத்வம் பரமிதி விதர்க்காந் விகடயந்।
விபோர்நாபீபத்மோ விதிசிவ நிதாநம் பகவத:
ததந்யத் ப்ருபங்கீபரவதிதி ஸித்தாந்தயதி ந:॥

என்ற ஸ்ரீரங்கராஜஸ்தவஸூக்தி இங்கு அநுஸந்திக்கத்தக்கது.

"சந்திசெய்யநின்றான்" என்றவிடத்து, சந்தி என்பதற்கு ஆராதநம் என்று எப்படி பொருளாயிற்றென்னில்; சந்தி என்று ஸந்த்யாவந்தனத்துக்குப் பேராய் அது ஸ்ரீபகவதாஜ்ஞயா பகவத்கைங்கர்யரூபமாகையாலே 'லக்ஷிதலக்ஷணை' என்னும் முறையால் பகவதாராதநத்தைச் சொல்லிற்றாகிறதென்று கொள்ளலாம்.

நின்றான்—வினையாலணையும் பெயர். ... ... (௩)

சதுரமாமதிள் சூழிலங்கைக் கிறைவன் தலைபத்து
உதிரவோட்டி ஓர்வெங்கணை யுய்த்தவன் ஓதவண்ணன்
மதுரமா வண்டுபாட மாமயிலா டரங்கத்தம்மான் திருவயிற்
றுதரபந்த மென்னுள்ளத்துள்நின் றுலாகின்றதே. (௪)

| | |
|---|---|
| சதுரம் | நாற்சதுரமாய் |
| மா | உயர்ந்திருக்கிற |
| மதிள் சூழ் | மதிள்களாலே சூழப்பட்ட |
| இலங்கைக்கு | லங்காநகரத்திற்கு |
| இறைவன் | நாதனான இராவணனை |
| ஓட்டி | (முதல்நாள் யுத்தத்தில்) தோற்று ஓடும்படி செய்து |
| | (மறுநாட்போரில்) |
| தலை பத்து | (அவனது) தலை பத்தும் |
| உதிர | (பனங்காய்போல்) உதிரும்படி |
| ஓர் | ஒப்பற்ற |
| வெம் கணை | கூர்மையான அஸ்த்ரத்தைப் |
| உய்த்தவன் | ப்ரயோகித்தவனும், |
| ஓதம் வண்ணன் | கடல்போன்ற (குளிர்ந்த) வடிவையுடையவனும், |
| வண்டு | வண்டுகளானவை |
| மதுரமா | மதுரமாக |
| பாட | இசைபாட |
| | (அதற்குத் தகுதியாக) |
| மா மயில் ஆடு | சிறந்த மயில்கள் கூத்தாடப்பெற்ற |
| அரங்கத்து அம்மான் | திருவரங்கத்தில் எழுந்தருளியிருக்கும் ஸ்வாமியுமான ஸ்ரீரங்கநாதனுடைய |
| திரு வயிறு உதரபந்தம் | திருவயிற்றில் சாத்தியுள்ள 'உதரபந்த' மென்னும் திருவாபரணமானது |
| என் உள்ளத்துள் நின்று | என் நெஞ்சினுள் நிலைத்து நின்று |
| உலாகின்றது | உலாவுகின்றது. |

கருத்து.—தேவதைகளையெல்லாம் திரட்டிக்கொணர்ந்து சேர்த்து வைத்தாற்போல் செறிவும் திண்மையும் உயர்த்தியுமுடைத்தாய் அஷ்டதிக்பாலகர்களுக்கும் எட்டிப்பார்க்கவொண்ணாத மதிள்களாலே சூழப்பட்டிருந்த இலங்

கைக்கு அரசனான இராவணனை முதல்நாட்போரில் மிகவும் இளைக்கப்பண்ணி "ஸசால சாபஞ்ச முமோச வீர:" என்றபடி-அவன் சளைத்துப்போய் வில்லையும் போகட்டு ஒன்றுஞ் செய்யமாட்டாது நின்றவளவிலே அவன்மேல் இரக்கமுற்று 'அப்பா! இன்று மிகவும் இளைத்தாய்; இப்போது உன்னை ஒரு நொடிப் பொழுதில் உயிர்தொலைக்கக் கூடுமாயினும் அது தர்மமல்லவென்று விட்டிட்டேன்; இன்றுபோய் நாளை வா' என்று சொல்லியனுப்பி, அப்படியே அவன் மறுநாள் மிக வல்லவன்போல வந்து நின்றவாறே ப்ரஹ்மாஸ்த்ரத்தைப் பிரயோகித்து அவன் தலைகளை அறுத்துத்தள்ளின வரலாற்றை அநுஸந்திக்கிறார் முன் இரண்டடிகளில்.

ஓட்டி என்பதற்கு இராவணனையோட்டி என்று பொருள்கொள்ளாமல், ஓர் வெங்கணையை ஓட்டி என்று பொருள்கூறுவதும் ஒன்று.

ஓதவண்ணன்—கண்டவர்களுடைய பாபத்தையும் தாபத்தையும் கழிக்க வல்ல கடல்போன்று ச்யாமளமான திருமேனியையுடையவன். திருவயிறு உதரம் என்று புநருக்தியன்றோவென்று சங்கிக்கவேண்டா; 'உதரபந்தம்' என்பது திருவாபரணத்தின் பெயர்; அது திருவயிற்றிற் சாத்தப்பட்டுள்ளமையைக் கூறியிருப்பதாக உணர்க. "ஸரஸீஜஸத்ருசாயதேக்ஷண:—ஸரஸீஜ ஸத்ருசாயதேக்ஷண:" என்பதுங் காண்க.

"திருவயிற்றுதரபந்தனம்" என்றும் பாடமுண்டு. (௪)

பாரமாய பழவினை பற்றறுத்து* என்னைத்தன்
வாரமாக்கி வைத்தான் வைத்ததன்றி யென்னுள்புகுந்தான் *
கோரமாதவம் செய்தனன் கொலறியே னரங்கத்தம்மான் * திரு
ஆரமார்பதன்றே அடியேனை யாட்கொண்டதே. (௫)

| | |
|---|---|
| பாரம் ஆய | பொறுக்கமுடியாத சுமையாயிராநின்ற |
| பழ வினை | அநாதியான பாபங்களின் |
| பற்று அறுத்து | சம்பந்தத்தைத் தொலைத்து |
| என்னை | (அதனால் பாபம் நீங்கப் பெற்ற) அடியேனை |
| தன் வாரம் ஆக்கி வைத்தான் | தன்னிடத்தில் அன்பு உடையவனாகப் பண்ணி வைத்தான் (ரங்கநாதன்); |
| வைத்தது அன்றி | இப்படி செய்துவைத்தது மல்லாமல் |
| என்னுள் புகுந்தான் | என் ஹ்ருதயத்திலும் ப்ரவேசித்து விட்டான்; |
| | (இப்படிப்பட்ட பாக்கியத்தைப் பெறுதற்கு உறுப்பாக, நான்) |
| கோரம் மா தவம் | உக்ரமான பெரியதொரு தபஸ்ஸை |
| செய்தனன் கொல் | (முற்பிறவியில்) செய்திருப்பேனோ என்னவோ? |
| அறியேன் | அறிகிறேனில்லை; |
| அரங்கத்து அம்மான் | ஸ்ரீரங்கநாதனுடைய |
| திரு ஆரம் | பிராட்டியையும் முக்தாஹாரத்தையும் உடைத்தான |
| மார்பு அது அன்றே | அத்திருமார்பன்றோ |
| அடியேனை | தாஸனான என்னை |
| ஆள் கொண்டது | அடிமைப் படுத்திக் கொண்டது. |

அடியார்களைப் பரிந்து காத்தருளவல்ல பெரியபிராட்டியாரும், ஸர்வரக்ஷகத்வத்தை வெளிப்படுத்தவல்ல ஹாரமும் திகழப்பெற்ற திருமார்பின் அழகே என்னை ஆட்படுத்திக்கொண்டதென்கிறார்.

காலமுள்ளதனையும் ப்ராயச்சித்தம் பண்ணினாலும் கழிக்கவொண்ணாதபடி வளர்ந்து செல்லுகிற என் தொல்லைத்தீவினைகளை வாஸனையோடுகூட அடியறுத்து அடியேனை நிஷ்கல்மஷனாக்கித் தன்னிடத்தில் பக்ஷபாதமுடையவனாக ஆக்கிக்கொண்ட மாத்திரத்தோடு நில்லாமல், இத்தனைகாலமாய்ப் பாவங்களுக்கு இருப்பிடமாயிருந்த என்னெஞ்சை அப்பாவங்களை யோட்டிவிட்டுத் தனக்கிருப்பிடமாக்கிக் கொண்டான் ஸ்ரீரங்கநாதன் என்கிறார் முன் அடிகளில். "கல்லும் கனைகடலும் வைகுந்தவானாடும், புல்லென்றொழிந்தனகொல் ஏபாவம்-வெல்ல, நெடியான் நிறங்கரியா னுள்புகுந்து நீங்கான், அடியேனதுள்ளத்தகம்" என்ற பெரியதிருவந்தாதிப் பாசுரம் இங்கு அநுஸந்திக்கத்தகும்.

தன்வீட்டைத் தான் ஆளவொண்ணாதபடி நெடுநாளாக ஆக்ரமித்துப் போந்த குரும்பர்களைச் சீற்றத்தோடு ஓட்டித் துரத்திவிட்டு மேனாணிப்புடன் தன் வீட்டில் விஜயஞ்செய்கின்ற மஹாராஜன்போல, அடியேனுடைய நெஞ்சை எம்பெருமான் தன்னதாக அபிமானித்து அரியபெரிய காரியங்கள்செய்து வந்துபுகும்படிக்கீடாக நான் எந்த ஜந்மத்தில் என்ன தபஸ்ஸு பண்ணினேனோ தெரியவில்லையே! என்று தடுமாறுகிறார் மூன்றாமடியில். "பெண்ணுலாஞ் சடையினானும் பிரமனுமுன்னைக் காண்பான், எண்ணிலாவூழியூழி தவஞ்செய்தார் வெள்கிநிற்ப" என்றபடி-மெய்யே தவம்புரிந்த பெரியோர்களும் இப்பேறு பெறாமல் வருந்திநிற்க, தமக்கு அசிந்திதமாக இப்பேறு வாய்த்தது தீவ்ரமானதொரு அபூர்வ தபஸ்ஸின் பலனாயிருக்கவேணுமென்றும், அத்தபஸ்ஸு தம் முயற்சியால் நிகழ்ந்ததல்லவென்றும், எம்பெருமானே இதற்கு நோன்புநோற்றவன் என்றும் இவருடைய உட்கருத்தாமென்க.

இனி, செய்தனன் என்பதைத் தன்மைவினைமுற்றாகக் கொள்ளாமல் படர்க்கைவினைமுற்றாகக்கொண்டு, இப்படி என் நெஞ்சினுள் புகுவதற்கு எம்பெருமான் உபயகாவேரிமத்தியத்திலே நின்றுகொண்டு என்ன கடுந்தவம் புரிந்தானோ? என்பதாக உரைத்தருளின தூப்புற்பிள்ளை வியாக்கியானமும் மிக்க பொருத்தமுடைத்தேயாம். அந்த முனிவாஹநபோகத்தில், "இது அதிவாதகர்ப்பமாக உத்ப்ரேக்ஷித்தபடி" என்று ஊடே ஒருவரி வரைந்து அச்சிட்டிருப்பது ஆதுநிகர்களின் கைச்சரக்காயிருக்கவடுக்கும். ஓரடியானைப் பெறுதற்கு எம்பெருமான் படுகிறபாடு இப்பிச்சுக்களுக்கு என்ன தெரியும்? அநாவ்ருத்தி ஸூத்ர ஸ்ரீபாஷ்யத்தில் "நவபரவைராக்ஷஸுத்யஸ்யகஸ்ய அத்யர்த்தப்ரியம் ஜ்ஞாநிநம் லப்த்வா—ந ச பரமபுருஷஸ்ஸத்ய ஸங்கல்ப: அத்யர்த்தப்ரியம் ஜ்ஞாநிநம் லப்த்வா" என்று எம்பெருமானார் அருளிச்செய்த ஸ்ரீஸூக்தியில் லப்த்வா என்ற பரமாஸத்தைப் பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளிற் பணிந்து கேட்கப்பெற்ற நம்தேசிகன் திருந்தி உரைத்த இச்சுவடறிவார் ஆர்கொல்?

பாரம், கோரம், ஆரம் என்பவை வடசொற்களின் விகாரம். வாரம்— பக்ஷபாதம். (௫)

துண்டவெண் பிறையன் துயர்தீர்த்தவன் * அஞ்சிறைய
வண்டுவாழ் பொழில்சூழரங்கநகர் மேயவப்பன் *
அண்டரண்ட பகிரண்டத்தொருமாநில மெழுமால்வரை * முற்றும்
உண்டகண்டங்கண்டீ ரடியேனை யுய்யக் கொண்டதே. (௬)

| | | | |
|---|---|---|---|
| துண்டம் | ஒரு துண்டாயிருக்கிற (கலைமாத்ரமான) | அண்டர் | அண்டத்துக்குட்பட்ட தேவாதிவர்க்கங்களையும் |
| வெண் பிறையன் | வெளுத்த சந்திரனை (முடியிலே) உடையவனான சிவனுடைய | அண்டம் | அண்டங்களையும் |
| | | பகிரண்டம் | அண்டாவரணங்களையும் |
| துயர் | (பிச்சையெடுத்துத் திரிந்த) பாதகத்தை | ஒரு மா நிலம் | ஒப்பற்ற மஹாப்ருதிவியையும் |
| தீர்த்தவன் | போக்கினவனும் | எழு மால் வரை | ஏழு குலபர்வதங்களையும் |
| அம் சிறைய வண்டு | அழகிய சிறகையுடைய வண்டுகள் | முற்றும் | சொல்லிச் சொல்லாத மற்றெல்லாவற்றையும் |
| வாழ் | வாழ்தற்கிடமான | உண்ட | அமுதுசெய்த |
| பொழில் சூழ் | சோலைகள் சூழப்பெற்ற | கண்டம் கண்டீர் | திருக்கழுத்துக்கிடீர் |
| அரங்கம் நகர் | திருவரங்கப்பெருநகரிலே | | |
| மேய | பொருந்தியிராநின்ற | அடியேனை | தாஸனான என்னை |
| அப்பன் | ஸ்வாமியுமான ஸ்ரீ ரங்கநாதனுடைய | உய்யக் கொண்டது | உஜ்ஜீவிப்பித்தது. |

ஒருகாலத்திலே, பரமசிவன், தன்னைப்போலவே பிரமனும் ஐந்துதலையுடையனாயிருப்பது பலரும் பார்த்து மயங்குவதற்கு இடமாயிருக்கின்றதென்று கருதி அவனது சிரமொன்றைக் கிள்ளியெடுத்துவிட, அக்கபாலம் அப்படியே சிவன் கையில் ஒட்டிக்கொள்ளுதலும், அவன் 'இதற்கு என்செய்வது?' என்று கவலைப்பட, தேவர்களும் முனிவர்களும் 'இப்பாவந்தொலையப் பிச்சையெடுக்க வேண்டும்; என்றைக்குக் கபாலம் நிறையுமோ, அன்றைக்கே இது கையைவிட்டு அகலும்' என்று உரைக்க, சிவபிரான் பலகாலம் பலதலங்களிலுஞ் சென்று பிச்சையேற்றுக்கொண்டே வருந்தித்திரிந்தும் அக்கபாலம் நீங்காதாக, பின்பு ஒருநாள் பதரிகாச்ரமத்தையடைந்து அங்கு எழுந்தருளியுள்ள நாராயண மூர்த்தியை வணங்கி இரந்தபோது, அப்பெருமான் 'அக்ஷயம்' என்று பிக்ஷையிட, உடனே அது நிறைந்து கையைவிட்டு அகன்றது என்பதாம். இவ்வரலாற்றுமுகத்தால், ஸ்ரீமந்நாராயணனுடைய பரத்வத்தை வெளியிட்டவாறு. ஈச்வரனென்று பெயருடைய ருத்ரன் கர்மவச்யனென்பதும், தன்னைத்தான் ரக்ஷித்துக்கொள்ளமாட்டாத இவன் வேறொருவர்க்கும் நிரபேக்ஷரக்ஷகனாக மாட்டானென்பதும், ஸ்ரீமந்நாராயணனே ஸர்வாநிஷ்ட நிவர்த்தகன் என்பதும் நன்கு வெளியாகும்.

அஞ்சிறையவண்டு என்றது ஞானானுஷ்டானங்கள் நன்கு அமைந்த ஆசிரியர்களைக் கூறியபடி. பலவகை மலர்களிலுஞ் சென்று அவற்றின் ஸாரமான தேனை அம்மலர்கள் கெடாதபடி கவர்ந்து உண்ணுந்தன்மையனவான வண்டுகளை, பலவகை சாஸ்த்ரங்களிலும் அவகாஹித்து அவற்றின் ஸாரமான தத்துவப்பொருளை அந்நூல்கள் நலிவுபடாதபடி க்ரஹித்து அநுபவிக்குந் தன்மையரான ஆசாரியராகச் சொல்லத்தட்டில்லை.

சிறகுகள் வண்டுகளின் கமநத்துக்கு ஸாதகமாவதுபோல் ஜ்ஞாநாநுஷ்டாநங்கள் உன்னதகதிக்கு ஸாதகமாமென்க.

காரணாவஸ்தையில் எல்லாக்காரியங்களையும் தன்பக்கலில் உபஸம்ஹரித்துப் பின்பு ஸ்ருஷ்டிக்குமாறு "வெற்றிப்போர்க்கடலரையன் விழுங்காமல் தான் விழுங்கி உய்யக்கொண்ட" என்றபடி ஸகலபதார்த்தங்களையும் பிரளயப் பெருவெள்ளத்தில் நின்றும் தப்பவைத்துத் தன் திருவயிற்றிலே அடக்கிநோக்கின பெருநன்றியையும், இப்போதும் தம்மை ஸம்ஸாரஸாகரம் விழுங்காதபடி ஆட்படுத்திக்கொண்ட உபகாராதிசயத்தையும் ஆநந்தமாகப்பேசுகிறார் பின்னடிகளில்.

பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்தில்—"சந்த்ரனுடைய க்ஷயத்தைப் போக்கினனென்னுமாம்" என்று அர்த்தாந்தரமும் அருளிச்செய்யப்பட்டிருப்பதால் "துண்டவெண் பிறையின்" என்றும் ஒருபாடமுண்டுபோலே.

அண்டம், பஹிரண்டம், கண்டம்-வடசொற்கள். ... ... (சு)

கையினார்சுரிசங்கனலாழியர் நீள்வரைபோல்
மெய்யனார் * துளபவிரையார் கமழ்நீண்முடியெம்
ஐயனார் * அணியரங்கனாரரவினணைமிசை மேயமாயனார் *
செய்யவாய் ஐயோ! என்னைச்சிந்தை கவர்ந்ததுவே. (எ)

| | |
|---|---|
| கையின் | திருக்கைகளில் |
| ஆர் | பொருந்தியிருக்கிற |
| சுரி சங்கு | சுரியையுடைய திருச்சங்கையும் |
| அனல் ஆழியர் | தீவீசுகின்ற திருவாழியையும் உடையாராய், |
| நீள் வரை போல் | பெரியதொரு மலைபோன்ற |
| மெய்யனார் | திருமேனியையுடையராய் |
| துளபம் விரை ஆர் | திருத்துழாயின் பரிமளம் மிகப்பெற்ற (அதனால்) |
| கமழ் | பரிமளியாநின்றுள்ள |
| நீள் முடி | உயர்ந்த திருவபிஷேகத்தை யுடையராய் |
| எம் ஐயனார் | எமக்கு ஸ்வாமியாய் |

| | |
|---|---|
| அணி அரங்கனார் | அழகுபொருந்திய திருவரங்கத்திற் கண்வளர்ந்தருள்பவராய் |
| அரவு இன் அணை மிசை மேய | திருவனந்தாழ்வானாகிற இனிய திருப்பள்ளியின் மீது பொருந்திய |
| மாயனார் | ஆச்சரியச் செய்கைகளையுடையரான ஸ்ரீரங்கநாதருடைய |
| செய்ய வாய் | சிவந்த திருப்பவளமானது |
| என்னை | என்னுடைய |
| சிந்தை | நெஞ்சை |
| கவர்ந்தது | கொள்ளைகொண்டது ; |
| ஐயோ | (ஆகந்தாதிசயக் குறிப்பு.) |

திருக்கைக்கு ஆயுதமாகவும் ஆபரணமாகவும் விளங்குகின்ற திருவாழி திருச்சங்குகளையுடையனாய், மாம்ஸசக்ஷுஸ்ஸுக்களான நம்போன்றவர்களும் கண்ணாரக் காணும்படியாகப் பெரிய பச்சைமாமலைபோன்ற மேனியையுடையனாய், அனைவரையும் ரக்ஷிக்க வலித்தனாயிருக்கும்படியை விளக்குகின்ற திருத்துழாய்மாலை அணிந்துள்ள திருவபிஷேகத்தால் அலங்கரிக்கப்பட்டவனாய், திருவரங்கத்தில் திருவனந்தாழ்வான்மீது பள்ளிகொள்பவனான அழகிய மணவாளனுடைய கொவ்வைக்கனிபோற் சிவந்த திருவதரமானது என் நெஞ்சைக் கவர்கின்றதே! இதற்கு என் செய்வேன்! என்கிறார்.

எம்பெருமானை முழுக்க அநுபவிக்கப் பாரித்திருக்கையில் இடையிலே நெஞ்சைக் கொள்ளைகொண்டுவிட்டதே அதரம்! இதற்கென்செய்வேன் என்பார் ஐயோ! என்கிறார். "பண்டே நெஞ்சுபறிகொடுத்தவென்னை அதிமாயம் செய்வதே! என்று கூப்பிடுகிறார்" என்பர் பெரியவாச்சான்பிள்ளை. "ஐயோ வென்றது-ஆச்சர்யத்தையாதல், அநுபவிக்க அரிதானபடியையாதல், அநுபவ ரஸத்தையாதல் காட்டுகிறது" என்பர் அப்புப்பிள்ளை.

சுரி-சங்குக்கு உள்ளதொரு லக்ஷணம். ... ... (எ)

பரியனாகிவந்த வவுணனுடல்கீண்ட* அமரர்க்
கரியவாதிப்பிரா னரங்கத்தமலன் முகத்து*
கரியவாகிப்புடைபரந்து மிளிர்ந்து செவ்வரியோடி* நீண்டவப்
பெரியவாயகண்களென்னைப் பேதைமைசெய்தனவே. (அ)

| | |
|---|---|
| பரியன் ஆகி | மிகவும் ஸ்தூலமான வடிவை யுடையனாய்க்கொண்டு |
| வந்த | (ப்ரஹ்லாதனை நலிய) வந்த |
| அவுணன் | அஸுரனான இரணியனுடைய |
| உடல் | சரீரத்தை |
| கீண்ட | கிழித்துப் பொகட்டவனும், |
| அமரர்க்கு | பிரமன் முதலிய தேவர்கட்கும் |
| அரிய | அணுகமுடியாதவனும் |
| ஆதி | ஜகத்காரணபூதனும் |
| பிரான் | மஹோபகாரகனும் |
| அரங்கத்து | கோயிலில் எழுந்தருளியிருக்கிற |
| அமலன் | பரமபாவனனுமாகிய எம்பெருமானுடைய |
| முகத்து | திருமுகமண்டலத்தில் |
| கரிய ஆகி | கறுத்த நிறமுடையவையாய் |
| புடை பரந்து | விசாலங்களாய் |
| மிளிர்ந்து | பிரகாசமுடையவையாய் |
| செவ்வரி ஓடி | செவ்வரி படர்ந்திருப்பனவாய் |
| நீண்ட | (காதுவரை) நீண்டிருப்பனவாய் |
| பெரிய ஆய | பெருமை பொருந்தியவையுமான |
| அக் கண்கள் | அந்தத் திருக்கண்களானவை |
| என்னை | அடியேனை |
| பேதைமை செய்தன | உந்மத்தனாகச் செய்துவிட்டன. |

எப்போதும் அழகியமணவாளனுடைய திருக்கண்களின் பெருமையையே தாம் வாய்வெருவி, பலரும் 'இவன் பேயன்' என்று ஏசும்படியான உன்மத்த

நிலைமையை அடைந்துவிட்டதாக அருளிச்செய்கிறார். "ஏழையராவியுண்ணுமிணைக் கூற்றங்கொலோவறியேன், ஆழியங்கண்ணபிரான் திருக்கண்கள் கொலோவறியேன்; சூழவுந்தாமரை நாண்மலர்போல் வந்து தோன்றுங்கண்டீர், தோழியர்காளன்னைமீர்! என்செய்கேன் துயராட்டியேனே" என்று திருக்கண்களில் ஈடுபட்டு நம்மாழ்வார் பட்டபாடு இவரும் படுகிறார் போலும்.

அவுணனுடல் கீண்ட வரலாறு:—தனித்தனி தேவர் மனிதர் விலங்கு முதலிய பிராணிகளாலும் பகலிலும் இரவிலும் பூமியிலும் வானத்திலும் வீட்டின் அகத்திலும் புறத்திலும் தனக்கு மரணமுண்டாகாதபடி வரம்பெற்ற இரணியன், தேவர் முதலியவர்களுக்குங் கொடுமைகள் இயற்றித் தன்னையே கடவுளாக அனைவரும் வணங்கும்படி செய்துவருகையில், அவனது மகனான ப்ரஹ்லாதாழ்வான், இளமைதொடங்கி மஹாவிஷ்ணுபக்தனாய்த் தந்தையின் கட்டளைப்படி முதலின் அவனது பெயரைச்சொல்லிக் கல்விகற்காமல் நாராயணநாமஞ் சொல்லிவரவே கடுங்கோபங்கொண்ட இரணியன் ப்ரஹ்லாதனைத் தன்வழியில் இணக்குவதற்குப் பலவாறு முயன்றவளவிலும் அங்ஙனம் வழிபடாத அவனைக் கொல்லுதற்கு என்ன உபாயஞ்செய்தும் அவன் திருமாலருளால் இறவாதொழிய, ஒருநாள் ஸாயங்காலத்தில் தந்தை மைந்தனைநோக்கி 'அடா! நீ சொல்லும் நாராயணன் என்பான் எங்கு உளன்? காட்டு' என்ன; அப்பிள்ளை 'தூணிலும் உளன், துரும்பிலும் உளன், எங்கும் உளன்' என்று உறுதியாய்ச் சொல்ல, உடனே இரணியன் 'இங்கு உளனோ?' என்று சொல்லி எதிரில் நின்ற ஒரு தூணைப்புடைக்க, அதிலிருந்து திருமால் உடனே மனிதரூபமும் சிங்கவடிவமுங் கலந்த நரஸிம்ஹமூர்த்தியாய்த் தோன்றி இரணியனைப் பிடித்து வாசற்படியில் தன் மடிமீது வைத்துக்கொண்டு தனது திருக்கை நகங்களால் அவன் மார்பைப் பிளந்து அழித்திட்டு ப்ரஹ்லாதனுக்கு அருள்செய்தான் என்பதாம்.

எம்பெருமானது அருள் ஒன்றையே நம்பி அவனுடைய சரணமே சரணம் என்ற உறுதியின்றித் தன்முயற்சியாலே அவனைப் பெறலாம் என்று நினைப்பவர்கள் தேவர்களாயிருப்பினும் அவர்கட்கும் அருமைப்படுவான் எம்பெருமான் என்பார், அமரர்க்கு அரிய என்றார். திருக்கண்களை வருணிப்பன பின்னடிகள். கறுத்த நிறமுடைத்தாதல், விசாலமாயிருத்தல், ஒளிபொருந்தியிருத்தல், செவ்வரிபடர்ந்திருத்தல் [சிறுகொடிபோன்ற சிவந்தரேகை ஓடுதல்,] காதளவும் நீண்டிருத்தல் இவை கண்களின் சிறப்புக்குறிப்பா மெனக. பேதைமை - அறிவில்லாமையும், உன்மத்தமும். ... ... ... (அ)

ஆலமாமரத்தி னிலைமேலொரு பாலகனாய்*
ஞாலமேழுமுண்டா னரங்கத்தரவினணையான்*
கோலமாமணியாரமும் முத்துத்தாமமும் முடிவில்லதோரெழில்*
நீலமேனிஐயோ! நிறைகொண்டதென்னெஞ்சினையே. (௯)

| | |
|---|---|
| மா | பெரிதான |
| ஆலமரத்தின் | ஆலமரத்தினுடைய |
| இலைமேல் | (சிறிய) இலையிலே |
| ஒரு பாலகன் ஆய் | ஒரு சிறு பிள்ளையாகி |
| ஞாலம் ஏழும் உண்டான் | ஏழுலகங்களையும் திருவயிற்றிலே வைத்து நோக்கினவனும் |
| அரங்கத்து | கோயிலிலே |
| அரவு இன் அணையான் | திருவனந்தாழ்வானாகிற திருப்பள்ளியின்மீது சாய்ந்தருள்பவனுமான ஸ்ரீரங்கநாதனுடைய |
| கோலம் | அழகிய |
| மா | சிறந்த |
| மணி ஆரமும் | ரத்நங்களாற் செய்யப்பட்ட ஹாரமும் |
| முத்து தாமமும் | முத்துவடமும் (ஆகிய இவை போன்ற பல்லாயிரம் திருவாபரணங்கள்) |
| முடிவு இல்லது | எல்லைகாணமுடியாமல் அபரிமிதமாக விளங்கா நிற்கப் பெற்றதும் |
| ஓர் எழில் | ஒப்பற்ற அழகையுடையதும் |
| நீலம் | கருநெய்தல் மலர் போன்றதுமான |
| மேனி | திருமேனியானது |
| என் நெஞ்சினை | எனது நெஞ்சினுடைய |
| நிறை | அடக்கத்தை |
| கொண்டது | கொள்ளைகொண்டு போயிற்று; |

ஐயோ! இதற்கென்செய்வேன்? என்கிறார்.

தனித்தனி ஒவ்வொரு அவயவத்திலும் ஈடுபட்டுப்போந்த ஆழ்வார், அவயவியான திருமேனியை அநுபவிக்குத் தமது நெஞ்சு பரவசமாகப் பெற்ற பெருமையைப் பேசுகிறார் இதில்.

ஓர் அவாந்தரப்ரளயத்தில், யாகோபயோகமாக மிகப்பெரிதாய் வளர்ந்திருப்பதொரு ஆலமரத்தின் ஒரு சிறு பசுந்தளிரிலே, தாயும் தந்தையுமில்லாததொரு தனிக்குழவியாய்ப் பள்ளிகொண்டு ஸகலலோகங்களையும் திருவயிற்றிலே வைத்து நோக்கியருளின திருவரங்கநாதனது ஸகலதிருவாபரணங்களாலும் அலங்கரிக்கப்பட்டுள்ள கரியதிருமேனியானது எனக்கு ஸேவைஸாதித்து என் நெஞ்சினது காம்பீர்யத்தைக் கொள்ளைகொண்டு போயிற்றே! என்கிறார்.

"ஐயோ!—பசலைச் சட்டையுடுத்துத் தனக்குள்ளதை யடையக் காட்டி எனக்குள்ளதையடையக் கொண்டானே!" என்பர் பெரியவாச்சான்பிள்ளை. "நான் எல்லாவற்றையும் நின்று நின்று அநுபவிக்க வேணுமென்றிருக்க, அநுபவபரிகரமான என்னெஞ்சைத் தன்பக்கலிலே இழுத்துக்கொள்வதே! ஐயோ! என்கிறார்" என்பர் அழகியமணவாளப்பெருமாள்நாயனார்.

கோலமாமணியாரங்களையும், முத்துத்தாமங்களையும், முடிவு இல்லாத அழகையும், நீலநிறத்தையுமுடைய திருமேனி என்று உரைத்தலுமாம்.

நெஞ்சை நிறைகொள்வதாவது-மோஹிக்கச் செய்கை என்க. நெஞ்சினை-உருபுமயக்கம். ... ... ... ... (௯)

கொண்டல்வண்ணனைக் கோவலனாய்வெண்ணெய்
உண்டவாயன் என்னுள்ளம் கவர்ந்தானை
அண்டர்கோனணியரங்கன் என்னமுதினைக்
கண்டகண்கள் மற்றொன்றினைக்காணாவே. (௰)

## ௰. கொண்டல்வண்ணனை.

- கொண்டல் வண்ணனை — காளமேகம்போன்ற வடிவையுடையவனும்
- கோவலனாய் வெண்ணெய் உண்டவாயன் — கோபால குமாரனாகப் பிறந்து வெண்ணெயமுது செய்த திருவாயை யுடையவனும்
- என் உள்ளம் — என்னுடைய நெஞ்சை
- கவர்ந்தானை — கொள்ளைகொண்டவனும்
- அண்டர் கோன் — நித்யஸூரிகட்குத் தலைவனும்
- அணி அரங்கன் — (பூமண்டலத்துக்கு) அலங்காரமான திருவரங்கத்தில் கண்வளர்ந்தருள்பவனும்
- என் அமுதினை — எனக்குப் பரமபோக்யமான அம்ருதமாயிருப்பவனுமான அழகிய மணவாளனை
- கண்ட கண்கள் — ஸேவிக்கப்பெற்ற (எனது) கண்களானவை!
- மற்று ஒன்றினை — வேறொன்றையும் (பரமபதநாதனையும்)
- காணா — காணமாட்டா.

இவ்வாழ்வார் 'அடியேன்' என்னுமதொழிய இப்ப்ரபந்தம் தலைக்கட்டு மளவிலும் தம்முடைய பேரும் ஊரும் பேச மறக்கும்படி தாம்பெற்ற அநுபவத்துக்கு இனி ஒருவிச்சேதம் (இடையூறு) வாராதபடி பெரியபெருமாள் அருள் புரிந்தமையைக் கண்டு வியந்து அப்பெரியபெருமாளுடைய திருமேனியிலேயே தாம் ஒரு நீராக லயம்பெற்றபடியைப் பேசித் தலைக்கட்டுகிறார்.

**கொண்டல்வண்ணன்**—கடலிலுள்ள நீரையடங்கலும் முகந்துகொண்டு காவேரிமத்தியில் வந்து படிந்ததொரு காளமேகம்போன்று கண்டாருடைய விடாயைத் தீர்க்கவல்ல திருமேனியையுடையவன்; அன்றி, மேடு பள்ளவாசியின்றித் தாழ்ந்தார் உயர்ந்தாரனைவரும் உஜ்ஜீவிக்கும்படி காருண்யரஸத்தை வர்ஷிக்குமவன் என்றுமாம். கொண்டல்-தொழிலாகு பெயர்.

ஸௌந்தரபாஹுஸ்தவத்தில், "யசோதயா ஸமமேஷு முஹு: ஸோ நந்தி தவாஸௌ-கானோ ரணஞ்சுதீர்தேள ஸவோஸ்வாஸ்ருஷ்டி ஹ்ருநவாஸ தத்ஷிகஸம்பதோ-யசோதா க்குள்யக்ரோந்மித ஸுபுதாக்ராணமுதிதேள கபோலாவத்யாபி ஹ்யநு-பாதந் தத்தரஷகமேதோ" என்ற ஆழ்வான், பண்டு யசோதைப்பிராட்டி முத்தங் கொடுத்த சுவடு இன்றும் அழகர் திவ்ய கபோலங்களில் திகழாநிற்குமென்று அநுபவித்தாற் போல, இவரும், பண்டு வெண்ணெயுண்ட முடைநாற்றம் இன்றும் பெரியபெருமாள் திருப்பவளத்திலே கமழாநிற்பதாக அநுபவிக்கிறார்—**கோவலனாய்** இத்யாதி. தசரதசக்ரவர்த்தி, தன்னுடைய ராஜ்யைச்வர்யத்தைப் புஜிக்கைக்கு 'எனக்கொரு பிள்ளை வேணும்' என்று நோன்பு நோற்றுப் பெருமாளைப் பெற்றாற்போலே, ஸ்ரீநந்தகோபரும் "கானாயன் கடிமனையில் தயிருண்டு நெய்பருக நந்தன்பெற்ற ஆனாயன்" என்றபடியே திருவாய்ப்பாடியில் கவ்ய ஸம்ருத்தியடங்கலும் பாழ்போகவொண்ணாதென்று இத்தை அமுது செய்கைக்காக நோன்புநோற்றுப் பெற்ற பிள்ளையாயிற்று ஸ்ரீக்ருஷ்ணன். பெரியபெருமாள் கொறுட்டை மோந்துபார்த்தால் இப்போதும் வெண்ணெய் நாறாநிற்குமாம்.

உப்புச்சாறும் எட்டாநிலத்திலேயிருக்கும் தேவர்களம்ருதம் போலன்றிப் பரம மதுரமாய்ப் பரமஸுலபமாயிருக்கும் நான் கண்ட அமுதம் என்பார் **என் அமுதினை** என்கிறார். 'அமுதனை' என்று சிலர் ஓதுவர்; அப்பாடம் ரஸமற்றதாமென மறுக்க; ஆழ்வார்க்கு அம்ருததாதாத்ம்யம் விவக்ஷிதமேயல்லது அம்ருத

தாத்பர்யம் விவக்ஷிதமன்று காணீர். “அளப்பரிய ஆரமுதை” என்றார் திருமங்கையாழ்வாரும்.

மற்றொன்றினைக் காணா—அம்ருதபானம் பண்ணினவர்கள் பாலையும் சோற்றையும் கண்ணெடுத்துப் பார்ப்பர்களோ? “ஸாவொ நாந்ருது ஹூதி— பாவோ நாந்யத்ர கச்சதி” என்று திருவடி சொன்னாப்போலே இவரும் மற்றொன்றினை என்கிறார்-பேர்சொல்லவும் கூசுகிறபடி. பரவ்யூஹாதிகள், மற்றுள்ள அர்ச்சாவதாரங்கள் ஒன்றையும் காணமாட்டா என்கை.

“பண்கொள் சோலைவழுதிநாடன் குருகைக்கோன் சடகோபன்” என்றும், “அங்கமலத்தடவயல்சூழ் ஆலிநாடன் அருள்மாரி அரட்டமுக்கி அடையார்சீயம், கொங்குமலர்க் குழலியர் வேள் மங்கை வேந்தன் கொற்றவேற் பரகாலன் கலியன்” என்றும் மற்றுள்ள ஆழ்வார்கள் தம் ஊரையும் பேரையும் பாசுரக் கணக்கையும் பரக்கச்சொல்லிக் கொண்டாற்போலே இவர் ஒன்றும் சொல்லிக் கொள்ளவொழிந்ததென்? எனில்; “மற்றொன்றினைக் காணா” என்ற மற்றொன்றில் இவையும் சேர்ந்துவிட்டனபோலும். பரவ்யூஹாதிகளையும் வேறு அர்ச்சாவதார எம்பெருமான்களையும் மறந்தாற்போலே தம்மையும் தம் ஊரையும் பாட்டையும் எல்லாவற்றையும் மறந்தொழிந்தாரென்ப.

அழகியமணவாளப்பெருமாள்நாயனார் வியாக்கியான ஸ்ரீஸூக்தி—“அல்லாதார் திருநாமப்பாட்டுப்போலே தம்மைச் சொல்லிற்றிலர்-‘விஸஸ்மார ததாத்மாநம்—விஸ்மார ததாத்மகம்’ என்கிறபடியே தாம் போகப்ரவணராய்த் தம்மை மறக்கையாலே. பலம் ஸதாபச்யந்தி யாகையாலே அது இங்கே ஸித்திக்கையாலே பலத்துக்குப் பலம் வேறுமோவென்று பலஞ்சொல்லிற்றிலர்.”

இப்பாட்டு அருளிச்செய்தவுடனே பெரியபெருமாள் அத்திருமேனியோடே ஆழ்வாரை அங்கீகரித்தருள, அனைவருங்காண அப்பிரானது திருமேனியிலே அந்தர்ப்பவித்துக் காய்ந்த இரும்பு உண்ட நீராயினர் என்று-ஸம்ப்ரதாயம் வல்ல பெரியோர்கள் அருளிச்செய்யக் கேட்டிருக்கையாயிருக்கும்.

திருப்பாணாழ்வார் திருவடிகளே சரணம்.

அடிவரவு:—அமலன் உவந்த மந்தி சதுரம் பாரம் துண்டம் கை பரி ஆலம் கொண்டல் கண்ணி.

எம்பெருமானார் திருவடிகளே சரணம்.

ஜீயர் திருவடிகளே சரணம்.

அமலனாதிபிரான்
உரை முற்றிற்று

சாற்றுக்கவி.

மன்னு மணவாள மாமுனிவன் மாண்புரைக்கு
மன்னடிக ளண்ணங்க ராசிரியன்—சொன்ன
அமலனா திப்பிரா னாழ்பொருளா ராய்வார்
கமலைநாதன் தாட்குரைப்பர் காப்பு.

Released by Maaran's Dog, Toronto, Canada